வெளியீடு எண் : 396



உ

சிவமயம்

# துறவி

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

23-வது குரு மகாசந்நிதானம்

சீர்வளர்சீர் சிவப்பிரகாச பண்டாரசந்நிதி அவர்கள்

அருளாணையின்வண்ணம்

வெளியிடப்பட்டது




திருவாவடுதுறை ஆதீனம்

1994

உ

சிவமயம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— *தவத்திரு மாதவச் சிவஞான யோகிகள்.*

உ

சிவமயம்

# பதிப்புரை

மானுடப்பிறவி நமக்கு வாய்த்துள்ளது. இதனை நாம் மதித்திடவேண்டும். இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ? யாரறிவார்? ஆகவே இப்பிறவியிலேயே வாழ்நாளை வீணாளாக்காமல் நல்லறங்களைச் செய்து பிறவிப்பயனை அடைய வேண்டும். இறப்பதையும் பிறப்பதையும் தொழிலாகக் கொண்டுள்ள துன்புறும் உயிர்க்கு நிரந்தரமான ஓர் இன்ப இடம் வேண்டுமல்லவா? அந்த இடமே முத்திப் பேறாகிய வீடாகும்.

அதனை அடைவதற்குப் பிரமசரியம், கிரஹஸ்தம், வானப்பிரத்தம், துறவு என்ற நான்கு வகையான ஆசிரம நிலைகள் உள்ளன. அந்த நான்குவகை நிலைகளுக் குள் துறவு நிலையை மேற்கொண்டு ஒழுகவேண்டுமானால் அதற்கு உரிய நெறி முறைகளை ஆகமம், பத்ததி முதலிய நூல் கள் விரிவாகக் கூறுகின்றன. அவற்றைச் சுருக்கமாக யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் கட்டுரை வடிவில் தந்துள்ளார்கள். இவர்கள் இவ் வாதீனத்தில் 'நாவலர்' பட்டம் பெற்ற வர்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

மேலும் பாம்பன் சுவாமிகள் சிவஞான தீபம் என்ற உரைநடை நூலுள் ஆறவ தாகிய துறவறவியல் என்ற பகுதியில்

துறவு நிலையைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார்கள். தியான முறைக்குரிய இலய யோகம் என்ற பகுதியும் கூறியுள்ளார்கள்.

திருக்குறளில் 'துறவு' என்ற அதிகாரமும் வள்ளுவரால் கூறப்பட்டுள்ளது. இவை அனைத்தையும் ஒன்றாக இணைத்தும் துறவு என்னும் அதிகாரத்துக்கு உரை எழுதியும் யாவருக்கும் பயன்படும் வண்ணம் வெளியிடவேண்டும் என்று திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 23-வது குரு மகாசந்நிதானம் சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச் சந்நிதி அவர்கள் அடியேனுக்குக் கட்டளையிட்டருளிய வண்ணம் இச்சிறு நூல் அடியேனால் தொகுக்கப்பெற்றுள்ளது

அடியேனை இப்பணியில் ஈடுபடச் செய் தருளிய குருவருளையும் திருவருளையும் வணங்கித் துதிக்கின்றேன்.

சிவபரம்பொருளைச் சிந்தையுள் வைத் துப் போற்றும் துறவு உள்ளம் கொண்ட தூய அருட்செல்வர்கள் இந்த நூலை சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்கள் அருளாசியுடன் பெற்றுப் பயன்பெறுவார் களாக.

திருவாவடுதுறை:
20—5—94.

சுயம்புநாதத் தம்பிரான்,
திருவாவடுதுறை ஆதீனம்.

உ

சிவமயம்

# துறவி



துறவியானவன் எல்லாப் பற்றுக்களை யும் முற்றத் துறந்தவன். துறவி காஷாய வஸ்திரமேயன்றி வேறு வஸ்திரந் தரிக்க லாகாது. அவனுக்குத் தண்ட கமண்டலங் களும் இருத்தல் வேண்டும். பிதா மாதா பெண்டிர் பிள்ளை முதலாயினோரிடத்தும் பொருள் முதலானவைகளிடத்தும் பற்றில்லா தவனே காஷாயந் தரித்தல் வேண்டும்; பற்றுள்ளவன் காஷாயந் தரித்தால், ரௌரவ நரகத்திலே கிடந்தழுந்துவன். இல்லறத்தின் வழுவினால், அவ்வழு பிராயச் சித்தத்தினாலே நீங்கும். துறவறத்தின் வழுவி னால் அவ்வழு அவனை நரகத்திற் செலுத்துவ தன்றிப் பிராயச்சித்தத்தினாலே நீங்காது.

துறவறத்தின் வழுவுதல் மலைச்சிகரத்தினின்று தவறி விழுதல் போலும்.

துறவி சற்குருவை வழிபட்டு, ஞான சாத்திரங்களை ஓதி, அவற்றின் பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து, நிட்டை கூடல் வேண்டும். தன்னை அடைந்த பரி பக்குவர்களுக்கு அவைகளை ஓதுவித்து, அவை களின் பொருளைப் போதிப்பித்தல் வேண்டும்.

துறவி ஒருவரையும் பகைக்கலாகாது. அநித்தியமாயும் உரோகத்துக்கு இருப்பிட மாயும் உள்ள சரீரத்தின் பொருட்டு ஒருவ ரோடும் கோபிக்கலாகாது. தமரென்றும் பிறரென்றும் விருப்பு வெறுப்பும் வைக்க லாகாது. எல்லாவுயிர்களிடத்தும் கருணை யுடையவனாய் இருத்தல் வேண்டும், நடக்கும் போது தரையிலே யாதொரு ஜந்துவும் இல்லாதிருக்கப்பார்த்து அடிவைத்தல்வேண் டும். தண்ணீரை நன்றாக வஸ்திரத்தினாலே வடித்துச் சுத்தி செய்து குடித்தல் வேண்டும், தன்னை ஒருவன் வைதாலும் அடித்தாலும்,

மற்றை எவ்வகைத் துன்பஞ் செய்தாலும், அவன்மேல் வெறுப்புக்கொள்ளாமல், இனிய வார்த்தைகளையே பேசல் வேண்டும். தனக்குப் பிறர் செய்யும் அவமானத்தை அமிர்தமாகவும் வழிபாட்டை விஷமாகவும் கொள்ளல் வேண்டும். வெய்யில் காற்று முதலானவைகளுக்கும், சரீரத்தில் வரும் துன்பங்களுக்கும், சிறிதும் அஞ்சாமல், அவைகளைச் சகித்துக்கொண்டு மகிழ்ச்சியுடன் இருத்தல் வேண்டும். உயிரோடிருத்தலையும் இறத்தலையும் சமமாகவே எண்ணல் வேண்டும்.

துறவி தாம்பூலம் சந்தனம் பூமாலை ஆபரணம் முதலிய போக்கியப் பொருள்களை அநுபவித்தலும், கீதங் கேட்டலும், கூத்துப் பார்த்தலும், பெண்களை இச்சித்தலும். அவர்களோடு பேசுதலும், அவர்கள் கூட்டத்திற் போதலும், கோயிலதிகாரஞ் செய்தலும், அரசர் வாயிலிற் செல்லலும், கழுத்தின் மேலன்றிக் கழுத்தின் கீழே க்ஷௌரஞ் செய்து கொள்ளலும், காஷாய வஸ்திரத்தை முழங்

கால்களின் மேலன்றி முழங்கால்களின் கீழே தொங்கும்படி உடுத்தலும் ஆகாவாம்.

துறவி வலக்கையிலே பிக்ஷாபாத்திரத்தையும் இடக்கையிலே தண்டத்தையும் தரித்துக்கொண்டு, நற்குடிப் பிறப்பும் நல்லறிவும் நல்லொழுக்கமும் ஈசுரபத்தியுமுடைய கிருகத்தர்கள் வீட்டிலே மௌனத்தோடு போய், பிக்ஷை வாங்கி, ஒருபொழுது உண்ணல் வேண்டும். தரித்திரரிடத்தே செல்லலாகாது. பிக்ஷையின் பொருட்டு யாரையேனும் நெருக்கலாகாது. பிக்ஷைக்குப் போனால், முற்றத்திலே தன்னிரண்டு கைகளையும் வலக்காற் பெருவிரலில் வைத்துக்கொண்டு நின்று, பிக்ஷையேற்றல் வேண்டும். பிக்ஷையின் பொருட்டு ஒருபசு கறக்கு நேரம்மட்டும் நிற்றல்வேண்டும், அவ்வளவும் பிக்ஷை வாராதொழியின், மற்றை வீட்டுக்குச் செல்லல் வேண்டும்; செல்லும் பொழுது, பிக்ஷையிடக் கொண்டுவந்தவர் அழைக்கின், அவ்விடத்திற்றானே நின்றுகொண்டு வாங்கல்

வேண்டும்; திருப்பிப்போய் வாங்கலாகாது. பிக்ஷை கிடைத்தபோது சந்தோஷித்தலும், கிடையாதபோது துக்கித்தலும் ஆகாவாம். விஷயங்களால் இழுக்கப்படுகின்ற இந்திரியங்களை, அற்பபோசனத்தினாலும், ஏகாந்தத்தில் வசித்தலினாலும், நல்வழியில்திருப்பல் வேண்டும். குறிசொல்லல், வைத்தியம், சோதிடம், மந்திரவாதம் முதலியவைகளினாலே பிக்ஷை சம்பாதிக்கலாகாது.

பிக்ஷை சாந்தானிக பிக்ஷையும், கண பிக்ஷையும், மாதுகரிபிக்ஷையும், அயாசித பிக்ஷையுமென நான்கு வகைப்படும், ஆசாரியர் முதலாயினோர், பக்தர்களாயினும், சீடர்களாயினும் அன்பினோடு தாமே தரும் மடம் விளைநிலம் முதயவைகளைச் சந்தான பரம்பரையாக அநுபவிக்கும்படி வாங்குவது சாந்தானிக பிக்ஷை, இல்வாழ்வாருடைய தெருவிலே புறப்பட்டு வீடுதோறும் அரிசி வாங்குவது கணபிக்ஷை. வண்டானது ஒரு பூவிலிருந்து அதனை வாதியாமல் பல பூக்களி

னுஞ் சென்று சிறுகச் சிறுகத் தேனைக் கிரகித்தல் போல, விரத்தனானவன் ஒருவரை வாதியாமல் பலரிடத்தும் சென்று சிறுகச் சிறுக அன்னம் வாங்குவது மாதுகரி பிக்ஷை. தனக்கென்று காசையும் பணத்தையும் தானியத்தையும் தீண்டாதவனுக்கே இந்த மாதுகரி பிக்ஷை பண்ணுதல் தகும். மத்தியான மாதற்கு முன்னே மாதுகரிபிக்ஷைக்குப் புறப்படலாகாது. விரத்தியின் முதிர்ச்சியினாலே 'நமக்குள்ள பிராரத்தத்தை நாம் எங்கேயிருப்பினும் கடவுள் புசிப்பிப்பர்' என்று துணிந்து, இருந்தவிடத்திலே தானே ஒருவன் தானாகக் கொண்டுவந்து தந்ததை வாங்கிப் புசிப்பது அயாசித பிக்ஷை.

ஈசுரநிந்தகர், குருநிந்தகர், வேதநிந்தகர், ஆகமநிந்தகர், தேவத் திரவியங் கவர்வோர், சமயாசாரமில்லாதவர், கொலைஞர், கள்வர், கள்ளுண்போர், புலாலுண்போர், பிறன்மனை நயப்போர், பொய்ச்சான்று சொல்வோர், பொய் வழக்குப் பேசுவோர்,

கன்னிகையை விற்போர், இழிந்த வருணத்தார் முதலாயினோரிடத்துப் பிக்ஷை வாங்கலாகாது. இவர்களுடைய அன்னத்தைப் புசித்தவர்களுக்கு ஒருபோதும் சித்தசுத்தி பிறவாது. அதனல் அவர்கள் மேன்மேலும் பாவங்களையே செய்து நரகத் துன்பத்தை அநுபவிப்பர்கள். அழுக்குப் புடைவையுடுத்தவள், கருப்பிணி, வெள்ளாட்டி, நற்குணமில்லாதவள், எண்ணெயிட்டுக் கொண்டவள், தாம்பூலந் தின்றவள், கணவனுக்கு முன்னுண்பவள், அருவருப்பானவள், உறுப்புக் குறைந்தவள், கருங்குட்ட முதலிய நோயுடையவள், விதிப்படி சௌசமுதலியன செய்யாதவள், சனனமரண சௌசமுடையவள் முதலியோர்கள் இடும் அன்னம் வாங்கலாகாது தீக்ஷையில்லாதவருடைய அன்னம் தீக்ஷையுடையவர் புசிக்கலாகாது.

சந்நியாசவேடந் தரித்துக்கொண்டு மண் பொன் பெண்களில் இச்சைவைப்பவர்களும் கோயிலதிகாரஞ்செய்யப் புகுந்து வேதத்

திரவியங்களை உபயோகிப்பவர்களும் பதிதராவார்கள். அவர்கள் இருபத்தெட்டுக் கோடி நரகங்களிலும் கற்பகாலங் கிடந்தழுந்துவார்கள். அவர்கள் அனுபவிக்கும் நரகத் துன்பங்களைச் சொல்ல முடியாது. அவர்கள் எண்ணில்லாத தரம் மலப்புழுவாய்ப் பிறந்து பிறந்து, மலத்தை உண்டிறப்பார்கள். இப் பிறவியினும், மேல் வரும் பிறவிகளினும், சுகசன்னி பிரமேகம், கிரந்தி, பகந்தரம், அரையாப்பு, நீரடைப்பு, கிரகணி, நீரிழிவு மூலரோகம், பிளவை, பெருவியாதி, குட்டம் கயம், மகாசுவாசம், குன்மம் முதலிய எண்ணில்லாத வியாதிகளினாலே வருந்துவர்கள். அப்பதிதர்களை வணங்குதலும், அவர்களோடு கூடுதலும், அவர்களோடு பந்தியிலிருந்து புசித்தலும், அவர்களைத் தீண்டலும், பிறவும் பெரும் பாதகங்களாம். அதலினாலே, நரகத் துன்பத்துக்கும் பிறவித் துன்பத்துக்கும் அஞ்சினவர்கள் அப்பதிதர்களைக் கண்டால், தூரத்திலே நீங்கிவிடக் கடவர்கள்.

பிரமசரியம் முதலிய நான்காச்சிரமங்களும் கிருகஸ்தாச்சிரமத்தினாலேயே நிலைபெறுகின்றன. சாத்திர விதிப்படியே அதனதன் கருமங்களை நடத்திவந்தால், இந்த நான்கு ஆச்சிரமங்களும் தனித் தனியே மோக்ஷத்தைக் கொடுக்க வல்லனவாம். நான்காச்சிரமிகளுள்ளும், வேதாகமங்களில் விதித்தபடி ஒழுகும் கிருகஸ்தன், மற்றை மூன்றுச்சிரமங்களையும் பிக்ஷை கொடுத்துப் பாதுகாத்தலினாலே உயர்ந்தவனென்று சொல்லப்படுகிறான். நதியும் நதமும் சமுத்திரத்தைச் சேர்தல் போலவே, பிரமசாரியும் வானப்பிரஸ்தனும் சந்நியாசியும் கிருகஸ்தனையே பிக்ஷையின் பொருட்டுச் சேர்கின்றார்கள். நதியென்பது கிழக்குமுகமாக ஓடும் ஆறு. நதமென்பது மேற்குமுகமாக ஓடும் ஆறு.

தேவர்கடனை யஞ்ஞத்தினாலும், முனிவர் கடனை வேதாத்தியாயனத்தினாலும், பிதிர்க் கடனைப் புதல்வரைப் பெறுதலினாலும் தீர்த்துக்கொண்டே, சந்நியாசத்திற் பிரவேசித்

தல் வேண்டும். பிரமசரியத்திலிருந்து கிருகஸ்தாச்சிரமத்தையும், அதிலிருந்து வானப்பிரஸ்தாச்சிரமத்தையும், அதிலிருந்து சந்நியாசாச்சிரமத்தையும் அடைவதே தகுதி ஆயினும், கிருகஸ்தாச்சிரமத்திற்கு உரிய சக்தியில்லாதவரும், பிரபஞ்சத்திலே மிக்க வைராக்கியமுடையவரும் விரும்பியபோது சந்நியாசம் பெறலாம்,

துறவு நிலை பெற்றவர், குளிக்கப்போய்ச் சேறுபூசிக் கொள்ளுதல் போலக் கூடா வொழுக்கம் பூண்டு பழிபாவங்களை அடையாமல் தங்கள் காலமெல்லாம் செபம் தியானம், பூசை, ஞான நூல்களை ஓதல், ஓதுவித்தல், கேட்டல், கேட்பித்தல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் என்பவைகளிலே, போக்கல் வேண்டும்' இவை செய்யாதவருடைய சந்நியாசவேடம் சிறிதும் பயன்படாது.

— யாழ்ப்பாணத்து நல்லூர்
ஸ்ரீ ஆறுமுக நாவலர்;

பாம்பன்

அத்தியாச்சிரம சுத்தாத்துவைத

வைதீக சைவ சித்தாந்த ஞானபானு

ஸ்ரீமத் - குமர குருதாச சுவாமிகளான்

அருளிச் செய்யப்பட்ட

# சிவஞான தீபம்

என்னும் உரைநடை நூலில்

## ஆருவது துறவற நிலையியல்

(எளிமை யாக்கப்பட்ட உரை நடை)

துறவு மார்க்க ஞானம். பொன்னில் பதித்த இரத்தினம் ஒக்கும். இல்லற மார்க்க ஞானம் இருப்பில் பதித்த இரத்தினம் ஒக்கும் ஒக்கும். ஒரு சீவனுக்குத் துறவு நிலை என்பது மறுபிறப்பாக எண்ணப்படுகிறது என்று - ஸ்ரீ

தேவியார் • மாதவாசாரியார் என்னும் தவ முடையாருக்குச் சொல்லியருளியது. எனவே ஒருவன் தான் அனுபவிக்க வேண்டும் என்று தேடி வைத்த எல்லாப் பொருள்களும் தன்னை விட்டு நீங்க. சாவானைப் போலத் துறவியும் ஆகின்றான்; அவன் பற்றுடையான் அல்லன் என்னும் பொருள் பயக்கின்றது. துறவு மேற்கொண்டோன் இதயம், ஒன்றையே நாடுவதாகும்; மனமும் இலயமாகும் இல்லறம் மேற்கொண்டோன் இதயம், பல பல நாடு வதாகும்; மனமும் இலயமாகாது. இவை இயல்பாகும்.

இந்தத் துறவினை. முதல் முறையாக வெளிப்பற்றாகிய உயிர்ச் சார்பு (=உடம்பு) பொருள் சார்பு என்னும் இருவகையும் ஒழித்துப் புறத் துறவாகக் கொள்ள வேண்டும். வெளிப்பற்றாகிய இதன் மீது வைத்த ஆசையை அறவே ஒழித்தல் வேண்டும். இரண்டாம் முறையாகப்

புலன்களை அடக்கவேண்டும். பின்பு முதலில் கூறப்பட்ட வெளிப்பற்றில் முன்னேறி இருந்த வாசனையை மீண்டும் தலையெடுக்காதவாறு அழித்து உளத்துறவாகக் கொள்ள வேண்டும். பின்பு, நனவு நிலையிலேயே சுழுத்தி நிலையடைந்து, மேலும் அஞ்ஞானத்தைப் போக்கி சீவதரிசனம் செய்து சத்தி தரிசனம் செய்து. சிவதரிசனம் செய்து பின்பு சீவஇயல்பு சிறிதளவும் இல்லாமல் சிவஇயல்பாகிய சமாதி கூடல் வேண்டும்.

மேற்கூறிய வெளிப்பற்றைச் சார்ந்த மனைவி மக்கள் முதலியவர்களது அன்பைப் புறப்பற்றென்றும், சரீரத்தின் மீது கொண்ட அன்பை இடைப்பற்றென்றும் சிலர் சொல்லுவர். அப்படியானால் புறப்பற்று இடைப்பற்று அகப்பற்று எனப்பற்று மூவகைப்படும்.

அகப்பற்று ஒழிந்தவர்களில் சிலரிடத்தில் புறப்பற்றுப் பொருள்கள் இருப்பதும் உண்டு, அது, வேர் அறுந்த கொடியானது

சிலபோது பச்சென் றிருப்பதைப் போன்ற
தாகும். இவ்வாறு அகப்பற்றாகிய வேரை
முதலில் நீக்கிவிட்டால் பின்னர் புறப்
பற்றாகிய கொடி தானே உலர்ந்துபோகும்
என்று கொள்வோமானால், அதுமுறை
யாகாது; ஏனெனில் முட்கள் உடைய
செடியை அல்லது கொடியை முதலில்
வெட்டிவிட்டுப் பின்பு வேரைக் கண்டறிந்து
நீக்கவேண்டி இருப்பதனால், காமம்,
வெகுளி, மயக்கம் என்னும் மூவகைக்
குற்றங்களே இங்கு முட்களாக எண்ணப்
படுகின்றன. இல்லறத்திலிருந்த ஞானி
களாகிய கண்ணன், சனகன் முதலிய
வர்கள் உற்பத்தியிலேயே முட்கள் இல்லாத
செடியை அல்லது கொடியைப் போன்ற
வர்கள் எனக் கொள்ள வேண்டும்.
சைதன்னிய சந்ததப் பிரமானந்தமாகிய
யானையை உணவாகத் தேடும் ஆன்மா
வாகிய சிங்கம், அந்த யானை தப்பிப்
போய்விட்டாலும் விடயானந்தமாகிய புலன்
இன்பமென்னும் எலியை உண்பதில்லை.

தோலை உரிக்காமல் பலாப்பழத்தை உண்பதில்லை. உய்த்து உணர வேண்டும். பற்றுக்களை நீக்கி மனமானது ஒருமைப்படத் துறந்த அறிவுடைய ஒருவன் பின்வருவனவற்றைக் கடைப் பிடிக்கக் கடவானாக.

1. வெண்மையான கௌபீனமாவது வெண்மையான ஆடையாவது அழகில்லாததாக அணியக்கடவன். திருவருட்செயலால் கல்லாடை கிடைப்பினும் அதனை உடுத்துக் கொள்ளலாம்.

2 அலங்கார ஆபரணங்களையும், நல்ல வாசனைப் பொருள்களையும் விரும்பாதிருக்கக் கடவன்.

3 உண்ணத்தக்க பொருள்களுள் கிடைத்ததை வாங்கிச் சுவை கருதாமல் உண்ணக்கடவன்.

4 அன்பில்லாதாருடைய அன்ன பானாதிகளை (உண்ணுதற்குரியன பருகுதற்குரியன) அருந்தாதிருக்கக் கடவன்.

5 கறையற்ற பல்லுடன் இருக்கக் கடவன்.

6 தேவையான சொல் அல்லாமல் மற்றும் பேச்சில்லாதவனாய் வாழக்கடவன்.

7 தசனம் (ஓசை) வெளிப்படக் கனைத்துச் சிரிக்காமல் இருக்கக் கடவன்.

8 புத்தகங்கள், கடவுளை உண்டாக்க வரவில்லை; நிச்சயிப்பதற்காக வந்தன; அவைற்றின் வேறுபாட்டால் அக்கடவுளும் வேறுபட்டு விகாரப்படல் எப்போதும் இல்லை என்னும் தெளிவினால் பாடண்டவாதத நக்கங்களுக்குக் காதுகொடாதிருக்கக் கடவன்.

9 சாதி உயர்வு பாராட்டுகின்றவர்களுடனும், தெய்வத்தை நிந்தனை செய்கின்றவர்களுடனும் சேராமல் அகலக் கடவன்.

10 ஆசிரியரையும், அடியார்களாகிய ஞானிகளையும், காட்டில் வாழும் தவவேடம்

பூண்டவர்களையும் வணங்கிக் கொள்ளக் கடவன்.

11 யாராகிலும் தனக்குச் செய்யும் வணக்கம் முதலிய உபசாரங்களைச் சிவப் பிரீதி செய்யக்கடவன். (செய்யாதிருந்தால் செய்த தவம் குறையும். தன்னைப் பிறர் வணங்குதற்கு இடம் கொடுக்காமல் இருத் தலும் நலமே,)

12 சூட்டையும் குளிர்ச்சியையும் இயன்ற அளவு பொறுத்துக் கொள்ளக் கடவன்

13 தரையில் படுக்கக் கடவன். (அணையில் படுத்தல் கூடாது)

14 ஊண் உறக்கங்களைக் குறைத்து யோகநித்திரையாய் உறங்கக் கடவன்

15 பல இடங்களிலும் பயமே இல்லா மல் உள்நோக்கமாக உலாவக் கடவன்

16 பிணம் பிழைத்து எழுந்தாலும் வியப்பானதென்று நோக்காதிருக்கக் கடவன்.

17 பிறர் செய்யும் பிழைகளைப் பொறுத்துக் கொள்ளக் கடவன்.

18 பெருமை இல்லாதவனாகக் குழந்தைகளின் குணம் காட்டி இருக்கக் கடவன்.

19 யான் எனது என்னும் ஆசை அறுக்கக் கடவன், (இவ்வாறு அறுத்தலையே துறவென்றும் கூறலாம்)

20. செலவு நிகழ்வு வரவு (இறந்த காலம் நிகழ்காலம் எதிர்காலம்) என்பன கருதாதவனாக இருக்கக் கடவன்.

21 பொன்னும் ஒடும் ஒன்றென மதிக்கும் நிருவிகற்ப சிந்தையோடு விளங்கக் கடவன்

22, ஈஸ்வர உபாசனையை இடைவிடாமல் விருத்திசெய்யக் கடவன்.

23 தனது தவத்தில் உண்டாகும் தேவ ரகசியங்களை வீணாக வெளிப்படுத்தா திருக்கக் கடவன்.

24 ஒரே தெய்வ வழிபாடுடைய தன் எண்ணத்தைத் தனித்திருந்தே முடிக்கக் கடவன்.

25. சிவபரம் பொருளின் திருவடிப் பேறு அடையும் வரையில் இத்தகைய துறவு நெறியிலேயே நிற்கக் கடவன்.

மேற்கூறிய கட்டளைகளுள் 10 ஆவதாகிய ஆசிரிய வணக்கம் என்பது, ஆசிரியன் அடிக்கினும், உதைக்கினும், ஏசினும் பொறுத்துக் கொள்ளல் வேண்டும்; அவனை விட்டு நீங்காது நிற்றல் வேண்டும்; இத்தகைய சாந்தமும் அன்பும் கூடிய உத்தம குணம் சிறப்புடையது ஏனென்றால் அடித்தல் ஏசுதல் முதலிய நிகழ்ச்சிகளுக்குப் பின்புதான், சிலருடைய உண்மைக் குணம் வெளிப்படும் என்பது உலகறிந்த உண்மைகளுள் ஒன்றாகும் அல்லவா? 22 ஆவ

தாகிய ஈஸ்வர உபாசனையை விருத்தி செய்வது எப்படி எனில், ... தனக்கு ஞானாசாரியார் போதித்த முறையைக் கொண்டே என்க. அந்த ஈஸ்வரனிடத்தில் நல்ல அன்பும் மதிப்பும், தந்தை மகன் என்னும் முறைமையும், ஆண்டவன் அடிமை என்னும் நிலைமையும் விளங்கத் தான் நடந்து கொள்ள வேண்டும். அப்போதே உள்ளுருக்கமும் பெருக வேண்டும். கன்றைத் தேடிப் பசுவானது கதறுவது போலக் கதறவும் வேண்டும்.

தனது இயலா நிலைமையை நினைந்து 'தந்தையே! தேவரீர் என்று வந்து அருள்புரிவீர்' எனப் பெருமூச்செறிய நின்று; மயிர்க்கூச்செறிய என்பு நெக்கு நெக்கு உருக, தேங்கித் திகைத்துத் தியானித்து நின்று, காணக் கிடைக்குமோ என நினைந்து கண்ணீர் வடித்து, அது தாரை தாரையாக ஒழுக அழவும் வேண்டும். அவனது திவ்விய திரு நாமத்தையே அடிக்கடி உருவாகச் செபிக்கவும் வேண்டும்.

நல்ல தோத்திரமாய் வேத வேதாந்த சார மரய்த் தான் பாடியதையேனும், பிறர் பாடி யதையேனும், அன்பு தோன்றப் பாடவும் வேண்டும், அங்ஙனம் பாடுவது அதிக சத்தமிட்டேனும், ஆலாபனம் பண்ணி யேனும், பிறருடைய காதுக்கு இன்பமாக இருக்கவேண்டும். என்னும் கருத்துக் கொண்டேனும், பாடலாகாது. இரக்க உரக்கம் காட்டித் தெய்வ சந்நிதியிலே தூய விண்ணப்பம் செய்தல் எனக் கெஞ்சுத லாய் விரைவில்லாமல் பாடவேண்டும். யாரும் இல்லாத ஒரு தனி இடத்தில் இறை வனை முன்னிலையாக்கிக் கொண்டு பாடுவ தாக இருந்தால், ஏற்புடைய இயன்ற இசை யுடன் பாடித் துதிக்கலாம். ஏனெனில் கேட் பவன் இறைவனே அல்லவா?

திருவாசகத் திருச்சதகத்தில்,

"ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்(கு)
அன்பிலை என்புருகிப்
பாடுகின்றிலை பதைப்பதும் செய்கிலை
பணிகிலை பாதமலர்

கூடு கின்றிலை கூட்டுகின் றதுமிலை துணையிலி
பிணா நெஞ்சே

தேடு கின்றலை தெருவுதோ றலறிலை
செய்வதொன் றறியேனே ''

எனவருவதும் பிறவும் காண்க. இத்தகைய பற்றற்ற பக்தி விசுவாசத்தினாலே தெய்வ அன்பு கிடைப்பதோடு, உண்மை அருளும் உண்மை ஞானமும் வாய்க்கப் பெறும். சிறந்த பக்தி விசுவாசத்தைக் கட்டுவாங்கன் என்னும் பெயருடைய அரசன் இரண்டு நாழிகைப் போது செய்தலும் அவனுக்கு வீடு பேறு எய்திற்று என்பதும் வேறு சிலருக்கும் அவ்வாறு வீடுபேறு எய்தியது என்பதும் முந்து நூல்களால் அறியப்படுகின்றமையால், அத்தகைய பக்தி விசுவாச சாதனங்கள் துறவறச் செல்வ முடையார்க்கும் உரியனவேயாகும்.

தவத்திற்கு அங்கமாகச் சடையேனும் சிகையேனும் வளர்த்தல் வேண்டும். முண்டி

தம் செய்து கொள்ளினும் கொள்ளலாம், (சிகையில் சீப்பிட்டுச் சீவிக் கொள்ளல் கூடாது)

இவ்வங்கப் பயன்பற்றிய மேற்கோள்;

'பத்தர் நூல்முறை வேணி பரித்திடில்
ஒத்த வற்றுறு வேணிஒவ் ஒன்றிற்கு
மெத்தும் அச்சுவ மேத பலத்தினைச்
சத்தி யம்அவன் நாள்தொறும் சார்தலே,

அண்ட வாணனுக்(கு) அன்பொடு முண்டிதம்
கொண்டநீள் சிகையாயினும் கொண்டுளோர்
பண்டு அருந்நா மேத பலத்தினேர்
எண்தி கழ்ந்த தினந்தொறும் எய்துவார்',

எனச் சிவபுண்ணியத் தெளிவின்கண் வரும் செய்யுள்களாம். வேணி - சடை. மயிர் வினைஞன் தொழில்; துறவியின் தலையினைத் தீண்டா திருத்தல் பொருத்தமுடையதாகவும்

எண்ணப்படுகிறது. தவ வேடதாரிகளாகிய ஈசன் அடியரார் எந்தக் குலத்தவராயினும் அவரை வணங்குதல் கடமையாகும்; வணங்காமை தீதாம். இல்லறம் துறவறம் என்னும் இரண்டிற்கும் இது பொதுவாகும், பஞ்சாட்சரப் பதி பசு பாச விளக்கத்தில்.

"எந்தக் குலத்தில் பிறந்தாலும்
ஈசன் அடியார்க்(கு) இழுக்கில்லை
நிந்தை செய்தோர் நரகுறுவார்
நித்தன் ஆணை ஐயமில்லை
மைந்த ரோடும் மனையோடும்
மாளா திருந்த நிதியோடும்
எந்தைஅடியார் மனம்கலங்கில்
ஈரே(ழு) உலகும் கலங்காவோ.?"

எனவரும் செய்யுளும் இங்கே நினைவு கொள்ளத் தக்கதாகும். துறவுநிலை நின்றவன் உணவின் பொருட்டு ஒருவனைப் பின் தொடர்ந்து போதல் கூடாது. காடியோ கூழோ உண்ண நேர்ந்தால் அவற்றை

வெறுப்பது தவக்குற்றமாகும்; அப்போது சிவச்செயலே பாவிக்கத்தக்கது; நீதி வழிப் படி நம்மை வந்தடையும் சிவச்செயலை மறந்து எவரையும் சபித்தல் கூடாது. தவமுடையவர்கள் அவ்வாறு சபிப்பது. சிறுபிள்ளைகள் இளம்பருவ விளையாட்டில் குட்டினவன் இருக்கக் குட்டாதவனை மற் றொருவன் காட்ட அவனைத் தாக்குவது போன்றதாகும், சாபத்தால் அரியதவமும் அழியும். இது

"கோப மிக்கபோது ஏவர் ஆறுவர்
குறுகு வோர்தமைக் கொடிய நோய்புகும்
சாபம் இட்டுமா தவர்கள் ஆயினோர்
தலைமை மிக்கதம் தவம் இழப்பரே"

என்னும் அஞ்ஞவதைப் பரணிப் பகுதியிலும் பெறப்படுகின்றது.

"சிறியோர் பெரும்பிழை செய்தனர் ஆயின்
பெரியோர் அப்பிழை பொறுத்தலும் அரிதே"

என்று சான்றோர் கூறுவதை உலகமக்களும் உணர்ந்து நடப்பது நன்மைதரும்.

தவம், இனிதாக நிகழும்போது மிகுந்த பசியேற்பட்டால் உண்ணவேண்டும், மிகுந்த உறக்கம் ஏற்பட்டால் உறங்கவேண்டும், பகல் உறக்கம் கொள்ளலாகாது. பிறவித் துன்பத்திற்கு அஞ்சினவருக்கு உறக்கமும் வாராது.

சிவஞான சமாதி கூடாமலிருந்து உறங்கும் நாள் எல்லாம், மனிதப்பிறப்பான நாட்களில் வீணாகக் கழிந்தனவாகக் கருதப்படும்.

நோய்க்கு இடமில்லாமல் மிகாமலும் குறையாமலும் உறங்கும் வழக்கத்தை மேற்கொண்டுள்ளவன், சுகாசனத்தில் சித்திரம் போலே அசைவில்லாமல் இருந்து தியான யோகம்பழகினால் எள்ளளவேனும் காமம் வருத்தாது.

உறக்கம் மிக்கபோதும் சமாதி கூடும் போதும் மனம் செயலற்றுப் போதலினால் காமம் வருத்தாது.

பசிமிக்கபோதும் தேகத்தைக் கட்டும் (மெய்மறந்தநிலை) போதும் மனமகிழ்ச்சி அற்றுப் போதலினால் காமம் வருத்தாது.

பிறவிப் பிணியை நினைக்கும் போதும் வீட்டின்பத்தை நினைக்கும் போதும் முறையே அச்சமும் ஆசையும் உண்டாதலினால் காமம் வருத்தாது.

புழுக்கள் நிறைந்து குடையும் அழுக்குப் பாண்டமாகிய இந்த உடம்பு எந்தநாள் நீங்கும்? எப்போது சுகமாகும் என்று நினைக்கும் சிறந்த பரிபக்குவ மடைந்த ஞானி. பெண்களை விரும்பு வானோ! விரும்பமாட்டான். நாய்க்கு. மரத்திலே தத்தி ஏறப் போய்விட்ட அணில் கிடைக்காமல் போய்விட்டாலும், அது அந்த அணிலைக்கண்டு ஆசைப்படுவதைப்போல.

பழங்காலத்துச் சிறந்த தவமுடையவர்களுள் சிலர் இயலாமையால் பெண்களை நோக்கி அறிவழிந்து நின்றனர். இவற்றையெல்லாம் நன்குணர்ந்த அறிவுடையோன் காம வசப்படாமல் இருத்தல் சிறந்த தவ ஒழுக்கமாகும

கற்புடைய மகளிர்க்கு இம்மையிலும் மறுமையிலும் சிறப்பும் இன்பமும் உண்டு.

வியபிசாரிக்கு இம்மையிலும் மறுமையிலும் இழிவும் துன்பமும் உண்டு,

அதுபோல பற்றற்றவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் சிறப்பும் இன்பமும் உண்டு.

கூடா ஒழுக்கமுடைய கபட சந்நியாசிகளுக்கு இம்மையிலும் மறுமையிலும் இழிவும் துன்பமும் உண்டு.

துறவியானவன் உண்பனவும் உடுப்பனவும் ஆகிய இருவகைப் பண்டங்களை யல்லா

மல் வேறு எதையும் ஏற்றுக் கொள்ளக் கூடாது.

பாழுங்கோயில் முதலிய இடங்களில் இராக் காலங்களில் இருக்க நேர்ந்தால் உடம்பை இறைவன்பால் ஒப்புவித்து, இறைவன் திருவடிமலரைச் சிந்திக்கும் தியானம் ஒன்றையே பிடித்துக் கொள்ள வேண்டும்.

மனிதர்களாலும் பேய்களாலும் பூதங்களாலும் தேவர்களாலும் பதிஞான சமாதிக்கு (தியானத்துக்கு) இடையூறுகள் ஏற்பட்டால் விடாப்பிடி பிடித்திருப்பதே முத்தியடைவதற்கு உபாயமாகும்.

தைத்தியர், (அசுரர்) இராக்கதர், தேவர் முனிவர், சித்தர், வித்தியாதரர் (கந்தருவர்) முதலியோர் அட்டமாசித்திகளையும் விண்ணுலக இன்பங்களையும் பெறுவதற்காக அச்சம், நேசம், ஆசை, கருவம், அபிமானம் பசி, தாகம் முதலியன மனத்தில் பொருந்

தாமல் நின்று தவம் செய்து அந்தச் சித்தி முதலியவற்றை அடைந்தார்கள். ஆகையால் அவைகளைவிட மிகவும் மேம்பட்டதாகிய வீட்டின்பம் என்னும் நித்திய கைவல்லியத்தை அந்த அச்சம் முதலியன நீங்காதார் அடைவதென்பது ஒருபோதும் இல்லை என்க.

சீவகரணம் சிவகரணமாக விளங்கும் பேராதுதான் அருள்தரிசனம் உண்டாகும். அத்தரிசனமே தன்னையும் தலைவனையும் தரிசிக்கச் செய்யும்.

சிவஞான தீபத்தை அஞ்ஞானமாகிய இருள் நிறைந்த உள்ளத்துள்ளே ஒளிவிடச் செய்யும்போது குற்றமற்ற படிகம் (பளிங்கு) போன்ற ஆன்மா, சிவத்தின் அறிவிலே அனுபவ சம்பந்தமாய் அழுந்தி வியாபியாகும். நிருவிகற்பசமாதி என்பதும் இதுவேயாகும்.

# இலய போகம்

சீதோஷ்ணம் சமநிலையுடைய தனிமை யான இடத்தை அடைந்து இயல்பான ஒரு ஆசனத்தில் (பத்மாசனம் நல்லது) இனி மையாக அமர்ந்து சிவபரம் பொருளாகவே மதிக்கத் தக்க தமது குருநாதரின் திருவடி மலரைச் சிந்திக்கவேண்டும். பிறகு மனத் தினை ஐம்புல நுகர்ச்சியாகிய விடயங்களில் செல்ல வொட்டாமல் தடுக்கவேண்டும். அப்போது பிராணவாயுவும் அந்த மனத் தின் அளவாய் அடங்கிவிடும். அந்நிலை கைகூடியதும் இதய தாமரை நடுவில் இறை வன் திருமேனியை ஆழ்ந்து தியானிக்க வேண்டும். அசையாமல் நிமிர்ந்து இருந்து இரண்டரை நாழிகைக்குக் குறையாமல் நாள்தோறும் இது பயிலத்தக்கதாகும். இரவு பகல் சேர்ந்த ஆறுநாள் இடையரு மல் நிற்கும் நிலையை அடைந்தால் காரியம் சித்தியாகும். பாவங்கள் அழிந்துபோகும். இறைவன் ஞானசிரியனுக வெளிப்பட்டு

அனுக்கிரகம் செய்வான். பின்பு அவனது கட்டளைப்படி நடப்பதும் கடமையாகும்.

வீடுபேறு அல்லாத வேறு வரங்களைக் கொடுத்த நருமாறு வெளிப்படும் அவன் இவ்வாசாரிய மூர்த்திக்கு வேருகிய ஒரு மூர்த்தியாய் நிற்பன். இந்த ஆசாரிய பரம னது திருவாய் மலரிலிருந்து ' யாம் உன்னை ஏன்று கொண்டோம்" என்னும் ஒரு திவ் விய திருமொழி தோன்றினும் உபாசகனு டைய சனன மரண பயம் தீர்ந்துவிட்ட தென்னும் திண்ணமே கொள்ளவேண்டும்.

இந்நிலையில் மா தவப்பேறுடையாரது மனவருத்தமாக யாதும் தேடிக் கொள்ளல் ஆகாது.

இறைவன் திருநாமத்தையும் தியானத் தையும் உபதேசித்த சற்குரு பக்தி கேட டைந்தால் அவை பயன் படாது போகும். ஆதலால் அந்தபக்தி கடைப்பிடிக்கத் தக் கது. அனுகூலம் ஆகும் வரையில் எவ்வ

கைப்பட்ட கூட்டத் தொடர்பும் இருத்தலா காது மேற்கூறிய தியானம் செய்யும்போது இடுப்பு பிடர் முதலிய உறுப்புகளிலே நோவுண்டாகுமானால் பொறுத்திருந்து விடாது பயிற்சி செய்தலினால் அது சிலநாட் களில் நீங்கி விடும். விடாது மீண்டும் மீண்டும் முயலுதல் வேண்டும்.



உ

சிவமயம்

# துறவு

## ( திருக்குறள் )

செல்வத்தின் நிலையாமையையும் யாக்கையின் நிலையாமையையும் கண்டுணர்ந்து, அச்செல்வத்தின்மீதும் யாக்கையின்மீதும் கொண்டுள்ள பற்றினை விடுதல் துறவாகும்.

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்"

(பொழிப்புரை) ஒருவன் யாதொரு பொருளின்மீது யாதொரு பொருளின்மீது கொண்டுள்ள ஆசையை வெறுத்து விடுகின்றானோ, அவன் அப்பொருளினால் அப்பொருளினால் உண்டாகும் துன்பம் இல்லாதவனாகிறான்.

" வேண்டின்உண் டாகத் துறக்க
துறந்தபின்
ஈண்டியற் பால பல "

(பொ - ரை) எல்லாப் பொருள்களையும் துறந்துவிட்டபின்னர், ஒருவனுக்கு இப்பிறப்பிலேயே உண்டாகும் இன்பங்கள் பலவாகும்; அவ்வின்பங்களை யெல்லாம் அடைய விரும்பினால், காலம் உண்டாக (இளம் பருவத்திலே) அப்பொருள்களைத் துறக்கக் கடவன். (2)

" அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை
விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு "

(பொ - ரை) முத்தி இன்பத்தை அடைவோர் ஐம்பொறிகளாகிய கருவிகளுக்கு உரிய ஐம்புல அறிவுகளையும் கெடுத்தல் வேண்டும்; அவ்வாறு கெடுக்கும்போது அப்புலன்களை அனுபவிப்பதற்காகத் தாம் படைத்த பொருள்களை எல்லாம் ஒருசேர விட்டு விடல் வேண்டும். (3)

" இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை
உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து "

(பொ - ரை) தவம் செய்வோருக்கு ஆசைப்படுவதாகிய ஒருபொருளும் இல்லாமல் இருப்பது இயல்பாகும்; ஒருபொருளாயினும் பெற்றிருப்பது அத்தவத்தைப் போக்கிவிடுவதால் மறுபடியும் மயக்கத்திற்குக் காரணமாகும். (4)

" மற்றும் தொடர்ப்பா(டு) எவன்கொல்
பிறப்பறுக்கல்
உற்றார்க்(கு) உடம்பும் மிகை "

(பொ - ரை) பிறவியை நீக்கவேண்டும் என்ற முயற்சியை மேற்கொண்டவருக்கு, அதற்கு உதவிசெய்யும் உடம்பும் அதிகமான ஒன்றாகும்; அவ்வாறு ஆனபிறகு அதற்கு மேலும் தொடர்பில்லாத சிலபொருள்களை விரும்புதலால் என்ன பயன்? ஒன்றுமில்லை என்றவாறு. (5)

"யான் என(து) என்னும் செருக்கறுப்
பான் வானோர்க்(கு)
உயர்ந்த உலகம் புகும்."

(பொ-ரை) தானல்லாத உடம்பை யான் என்றும் தன்னோடு தொடர்பில்லாத பொருளை எனது என்றும் நினைத்து அவற்றின் மீது விருப்பம் கொள்வதற்குக் காரணமாகிய மயக்கத்தை நீக்குபவன், தேவர்க்கும் அடைவதற்கு அரிய முத்தி உலகத்தை அடைவான். (6)

"பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு."

(பொ-ரை) அகப்பற்று புறப்பற்று ஆகிய இருவகைப் பற்றுக்களையும் இறுகப் பற்றிக் கொண்டு விடாதவரை, பிறவித்துன்பங்கள் இறுகப் பற்றிக் கொண்டு விட்டு நீங்காவாம் (7)

"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்."

(பொ-ரை) முழுவதும் துறந்தவர் முத்தி இன்பத்தை அடைந்தவராவார்; அப்படித் துறவாதவர் மாயையில் மயங்கிப் பிறவியாகிய வலையில் அகப்பட்டவராவார். (8)

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்"

(பொ-ரை) ஒருவன் இருவகைப் பற்றுக்களையும் அற்றபொழுதே அப்பற்றற்ற தன்மையானது அவனது பிறவியையொழிக்கும்; அவை அற்றுப்போகாத போது, அவற்றால் பிறந்தும் இறந்தும் வருகின்ற நிலையாமையானது அறியப்படும். (9)

"பற்றுக பற்றற்றான் பற்றினை
அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

(பொ-ரை) விடாது தொடர்ந்து வந்த பற்று விடுவதற்கு, எல்லாப் பொருள்களையும் பற்றிநின்றே பற்றற்ற கடவுளால்

சொல்லப்பட்ட முத்தி நெறியை இதுவே நல்ல நெறி என்று மனத்துள் கொள்ளுக, அதனிடத்துத் தியான சமாதிகளை மனத் திறைல் செய்க. (10)



